REGD. No. TN-MS (C) 244 ❋ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 40 காசு



**பேச்சு**

மிகவும் தாறுமாறான பேச்சு, எழுதின் மூலம் கிடைக்கும் பலன் கனவில் கண்ட கனிபோல விழித்துப் பார்த்தால் வாயில் நீர்தான் இருக்கும், கனி இருக்காது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**வரதட்சிணை**

படித்தவன், படிக்காதவன் என்ற பேதம் உள்ளவரைக்கும் வரதட்சிணை நிலை மாறாது.

- தந்தை பெரியார்



● மலர் 5 சென்னை 24—6—1981 புதன் வெளியூர் 25—6—1981 வியாழன் இதழ் 245 ●

# எரிசாராய விவகாரத்தில் தி.மு.க. ஆட்சியில் நடந்த ரூபாய் 50 கோடி ஊழலை அம்பலப்படுத்தும் கோப்புகள்

## முதல்வர் புரட்சித்தலைவர் தகவல்

தஞ்சை, ஜூன் 24-தி. மு. க. ஆட்சிக் காலத்தில் எரிசாராய அனுமதி வழங்கியதில் நடந்த 50 கோடி ரூபாய் ஊழலை அம்பலப் படுத்தும் கோப்புகள் இருக்கின்றன என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

மன்னார்குடி, ஆடுதுறை கூட்டங்களில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசியதாவது.

தமிழகத்திற்கு கப்பல் வாங்க முடிவு செய்த போது ஒரு அதிகாரிகூறியதைக் கேட்டு கருணாநிதி செய்த பிரசாரத்தால் ஏற்பட்ட தாமதத்தின் விளைவு இன்று ரூ.15கோடிநஷ்டம் அடைய வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது.

வாங்காத கப்பலுக்கு கமிஷன் பெற்றதாக கருணாநிதி அன்றுகூறினார்.

யாரும் கப்பல் வாங்க அன்று முன் வராத நிலையில் கப்பல் விலை குறைவாக இருந்தது.

ஆனால் இன்று 3 கப்பல் வாங்க வேண்டுமானால் ரூ. 15 கோடி கூடுதலாகக் கேட்கிறார்கள்.

### கருணாநிதிக்கு கோடிகள் சாதாரணம்

கருணாநிதிக்கு கோடிகள் சாதாரணம். கோடியை நிறையப் பார்த்து அனுபவம் உள்ளவர்.

மது உற்பத்தித் தொழிற்சாலைக்கு லைசென்ஸ் வழங்கியதில் ரூ. 5 கோடி கமிஷன் பெற்றதாகக் கருணாநிதி கூறுகிறார்.

நான் அப்படி வாங்கி இருந்தால் என்றாவது ஒரு நாள் உண்மை வெளிவராமல் போகாது.

தி. மு. க. ஆட்சிக் காலத்தில் மதுவிலக்கு ரத்து செய்தபோது ரூ. 50 கோடிக்கு ஊழல் நடந்தது.

இதற்கான கோப்புகள் இருக்கின்றன. இதற்கான விசாரணை நடத்த கமிஷன் இருப்பதால் இதற்கு மேல் சொல்வது சரியல்ல.

69 முதல் 76வரை முந்திய ஆட்சியில் நடந்த ஊழல்களைக் கண்டுபிடித்து நான் சொன்னால் அவருக்கு எரிச்சல், ஆத்திரம் வருகிறது.

இதில் பலர் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். உண்மையைமறைத்துவிட முடியாது.

நாராயணசாமி நாயுடுவைச்சுற்றிதி.மு.க.வினரும், இந்திரா காங்கிரசாரும் இருந்துகொண்டு வாங்கிய கடனைக் கொடுக்காதே என்று கூறுகிறார்கள்.

### யார் யார்?

நாயுடுவை சுற்றி இருப்பவர்கள் யார், யார் என்பதைக் கேட்டால் நான் பெயரைச் செல்லவும் தயாராக இருக்கிறேன்.

விவசாயிகள் கடனை தள்ளுபடி செய்தால்கறுப்பு பட்டியலில் சேர்ப்போம் என்கிறார்கள்.

கறுப்பு பட்டியலில் தமிழகம் சேர்க்கப்பட்டால் மத்திய அரசு நிதி உதவி கிடைக்காது. விவசாயிகள் கடனை ரத்து செய்வோம் என்றோம்.

இதுவரை ரூ.140 கோடி கடன் வட்டியை தள்ளுபடி செய்து இருக்கிறோம்.

மீதமுள்ள ரூ.100கோடியையும் தள்ளுபடி செய்ய தயாராக இருக்கிறோம்.

இந்திரா காங்கிரஸ் தி. மு. க. பாராளுமன்ற உறுப்பினர்கள் விவசாயிகள்கடன் தள்ளுபடிசெய்ய மத்திய அரசு அனுமதி குறித்து பேசுவதே இல்லை.

### அவர்களின் ஆசை

கறுப்பு பட்டியலில் தமிழகத்தை சேர்த்தால் எந்த நன்மையும் பெற முடியாது என்ற நிலையில் எங்கள்மீது தமிழக மக்கள் வெறுப்பு அடைவார்கள் என்று இந்திரா காங்கிரசாரும் தி. மு. க.வினரும் நினைக்கிறார்கள்.

இந்த ராமச்சந்திரன் ஏமாளியல்ல.

அண்ணா தி.மு.க. ஆட்சிக்கு கெட்ட பெயர் ஏற்படுத்த வேண்டும் என்று நினைப்பவர்கள் இருக்கிறார்கள்.

அவர்கள் அந்த எண்ணத்தை விட்டு விடவேண்டும்.

கழக ஆட்சிக்கு கெட்ட பெயர் ஏற்படுத்திவிடலாம் என்று கற்பனை செய்து கொண்டு இருக்கிறார்கள்.

### எங்களுக்கும் தெரியும்

எதற்கு எடுத்தாலும் போராட்டம் நடத்தி ஆட்சிக்கு கெட்ட பெயர் ஏற்படுத்திவிடலாம் என்று யாரும் கருதினால் கழகமும் போராட்டம் நடத்தவேண்டிய சூழ்நிலை ஏற்படும்.

அந்த நிலை ஏற்பட்டால் தலைவர்களாகிய நாங்கள் அதனைத்தடுக்க முடியாது.

நாங்கள் போராட்டம் நடத்தத் தெரியாதவர்கள் அல்ல.

எங்களுக்கும் அறவழியில்போராட்டம் நடத்தத் தெரியும்.

போராட்டம் நடத்தாமல் ஆட்சி நடத்தவேண்டும் என்ற எண்ணம் எங்களுக்கு உண்டு.

கருணாநிதியின் பெருமுயற்சியால்தி.மு.க. வினருக்கும், அண்ணாதி.மு.க. வினருக்கும் இடையே வன்முறை ஏற்பட்டு வருகிறது.

நானும் கருணாநிதியும் நேரிடையாக சண்டை போட்டுக் கொள்ள முடியாது.

தொண்டர்கள் ஒருவருக்கு ஒருவர் அடித்துக் கொள்வதால் தலைவர்களுக்கு எந்த பாதிப்பும் இல்லை.

அனைத்துக் கட்சிகளுக்கும் ஒரு வேண்டுகோள் விடுக்கிறேன்.

ஒருவருக்கொருவர் அன்புடன் செயல்பட்டு வாழவேண்டும்.

அந்த எண்ணம் இருந்தால் தான் நாட்டில் அமைதி ஏற்படும்.

தேர்தல் நேரத்தில் நாங்கள் தந்த வாக்குறுதிகள் அனைத்தையும் நிறைவேற்றி ஆக வேண்டும்.

இந்தநிலையில் வசதிஉள்ளவர்கள் உழைப்பவர்கட்கு விட்டுக் கொடுத்து ஒத்துழைப்புத் தரவேண்டும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

இந்தக் கூட்டங்களில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர், அமைச்சர் எஸ். டி.எஸ். ஆகியோரும் பேசினார்கள்.

### லட்சோப லட்சம் மக்கள்

முதல்வர் புரட்சித்தலைவர் பேசிய மன்னார்குடி கூட்டத்திலும், ஆடுதுறை கூட்டத்திலும் லட்சக்கணக்கில் கழகத் தோழர்களும், பொதுமக்களும் கலந்து கொண்டனர்.

தாய்க்குலத்தினரும் பெரும் அளவில் கலந்து கொண்டு புரட்சித்தலைவர் பேச்சைக் கேட்டனர்.

கண்ணுக்கு எட்டிய தூரம் மக்கள் தலைகளாக காணப்பட்டது.

புரட்சித்தலைவர் வருகையையொட்டி மன்னையும், ஆடுதுறையும் விழாக்கோலம் பூண்டு இருந்தது.

புரட்சித்தலைவர் சென்ற வழி எங்கும் மக்கள் வெள்ளம்.

உற்சாக முழக்கமிட்டு புரட்சித்தலைவரை எல்லா இடங்களிலும் வரவேற்றனர்.

## புரட்சித்தலைவர் பற்றி அவதூறு: மக்வானாவுக்கு ப. உ. ச. மறுப்பு

சென்னை, ஜூன் 24-புரட்சித்தலைவர் பற்றி அவதூறாகக் கருத்துக் கூறிய மத்திய அமைச்சர் மக்வானாவுக்கு ப. உ. ச. மறுப்பு தெரிவித்திருக்கிறார்.

கழகப் பொதுச்செயலாளர் ப. உ. ச. விடுத்துள்ள ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

மாண்புமிகு மத்திய அமைச்சர் மக்வானா அவர்கள் சென்னையில் நிருபர்களிடம் பேசும்போது, ''மத்திய அரசு எரிசாராய விசாரணை கமிஷன் நியமித்தால் நான் ராஜினாமா செய்துவிடுவேன் என்று தமிழக முதல்வர் சொல்லி அந்தச் செய்தி பத்திரிகைகளில்வந்ததாகவும் அதைத் தாம் பார்த்தாகவும்கூறியதோடு இதுகுறித்து தமிழக முதல்வர் முடிவெடுக்க வேண்டும் என்றும், தான் சொன்ன சொல்லுக்கு மாறாக அவரே பின்வாங்குவாரேயானால் நான் என்ன செய்ய முடியும் என்று சொல்லியதாக பத்திரிகைகளில் செய்தி வந்திருக்கிறது.

### எங்கே பேசினார்?

தமிழக முதல்வர் அப்படி பேசியதாக எந்தப் பத்திரிகையில் செய்தி வந்தது என்று தெரியவில்லை

தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் எங்கும் எப்போதும் அப்படிப் பேசவுமில்லை. பேசாத ஒரு கருத்தை பேசியதாக நினைத்துக் கொண்டு மத்திய அமைச்சர் கருத்துக் கூறுவது முறைதானா என்பதை யோசிக்க வேண்டுகிறேன்.

மீனாட்சிபுரம் என்ற கிராமத்தில் தாழ்த்தப்பட்ட மக்கள் மதம் மாறியதற்கு இந்து மதத்தினர் செய்யும் கொடுமைகள்தான் காரணம் என்று பத்திரிகையாளர்களிடத்தில் பேசும்போது சொல்லிவிட்டு, பொதுக் கூட்டத்தில் பேசுகையில், அந்த மக்கள் அ.தி.மு.க.வுக்கு வாக்களிக்காத காரணத்தால் கொடுமைப்படுத்தப் படுகிறார்கள், அதனால் தான மதம் மாறுகிறார்கள் என்று மக்வானா பேசியதாக பத்திரிகைகளில் செய்தி வெளி வந்திருக்கிறது.

இதில் எது உண்மை என்று தெரியவில்லை.

இருப்பினும் அமைச்சர் இப்படி மாறுபட்ட கருத்தைத் தெரிவித்திருப்பாரேயானால் கழகத்தின் சார்பில் என் வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

### தவறான கருத்து

தாழ்த்தப்பட்ட மக்கள் அ. தி. மு. க. வுக்கு வாக்களிக்கவில்லை என்பது தவறான கருத்து என்பதை மத்திய அமைச்சருக்கு நினைவூட்டுவதோடு அந்தக் கிராமத்துக்கு தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் அவர்கள் நேரடியாகவே சென்று அந்த மக்களிடத்தில் விவாதித்தார்கள். அந்த மக்கள் புரட்சித்தலைவரை அன்போடு வரவேற்றார்கள் என்பதையும் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

உண்மை இப்படி இருக்க தவறான தகவல் தருகின்றவர்களைவைத்துக்கொண்டு தமிழக முதலமைச்சரை இப்படிப்பேசுவது நியாயம் தானா என்பதை யோசிக்குமாறு அந்த மத்திய அமைச்சரையே கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு ப.உ.ச. தமது அறிக்கையில் கூறியிருக்கிறார்.

## உமக்கு என்ன அங்கு மரியாதை?

அவருடைய (நாவலருடைய) பேட்டி எல்லா பத்திரிகையிலும் உடனே வந்துள்ளது. ஆனால் அண்ணா ஏடு உடனடியாக வெளியிடவில்லை. நெடுஞ்செழியனுக்கு அவ்வளவுதான் அங்கு மரியாதை

— கருணாநிதி மாமல்லன்

ஆணிவேரை அசைத்துப்பார்த்து, விழுதுகளைப் பிடித்து தொங்கிப்பார்த்து, புரட்சித்தலைவருக்கும், நாவலருக்கும் இடையில் சிண்டு முடியவந்து சீரழிந்து ஓடிய கருணாநிதி—

அண்ணா பத்திரிகைக்கும், நாவலருக்குமிடையில் சிண்டு முடியும் சின்னத்தனத்தில் இறங்கியிருக்கிறார்,

கடந்த 22-ந் தேதி திருச்சியில் நாவலர் அளித்த பேட்டி அன்று மாலையே சில பத்திரிகைகளில் வந்தது. அண்ணாவில் மறுநாள் (23 ந்தேதி) வெளிவந்தது.

பேட்டியை மறுநாள் வெளியிடுவதே மரியாதைக் குறைவு என்று சொல்லும் மாமல்லக் கருணாநிதியே!

'அண்ணா'வுக்கும், நாவலருக்கும் நீ சிண்டு முடிந்து எழுதியிருக்கும் இன்றைய உன் முரசொலியைக் கையில் எடுத்துக்கொள்!

இரண்டாம் பக்கத்தில் மேலே பார்!

உங்கள் கட்சி துணைப் பொதுச்செயலாளரின் பேச்சு வந்திருக்கிறது அல்லவா?

உன் பத்திரிகையில் வந்திருக்கும் அந்தப் பேச்சு கடந்த 18-ந் தேதி சென்னை பெரியமேட்டில் அவர் பேசிய பேச்சு.

18-ந் தேதி பேசிய பேச்சை 24-ந் தேதி வெளியிடுகிறாயே... அப்படியானால் நாஞ்சில் மனோகரனுக்கு முரசொலியில் கொஞ்சமும் மரியாதை இல்லை என்பதை ஒப்புக்கொள்கிறாயா?

மாமல்லக் கருணாநிதியே, முரசொலியைக் கீழே போடாதே...அப்படியே மூன்றாம் பக்கம் பார்,

''காவிரிப்பிரச்னையும், எரிசாராய ஊழல் பிரச்னையும்'' என்ற தலைப்பில் உனது பேச்சு வெளியிடப்பட்டிருக்கிறது அல்லவா?

அந்தப் பேச்சு 21-ந் தேதி புதுக்கோட்டையில் பேசிய பேச்சு.

21-ந் தேதி பேசிய பேச்சை 24-ந் தேதி முரசொலி வெளியிடுகிறதே.. முரசொலியில் உனக்கிருக்கும் மரியாதை இவ்வளவுதான் என்பதை ஒப்புக்கொள்கிறாயா?

## கருணாநிதி ஊழல்களை மறைக்கத்துடிப்பதேன்? நெடுமாறன் கேள்வி

சென்னை, ஜூன் 24-தி. மு. க தலைவர் கருணாநிதியின் ஊழல்களை மறைக்க மத்திய அரசு துடிப்பதேன் என்று காமராஜ் காங்கிரஸ் தலைவர் நெடுமாறன் கேட்டிருக்கிறார்.

தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் தலைவர் பி. நெடுமாறன் விடுத்துள்ள அறிக்கையில் கூறி இருப்பதாவது:

தமிழ்நாடு, கேரளம் ஆகிய இரு மாநில அரசுகள் அமைத்துள்ள விசாரணைக் கமிஷன்களை கலைத்து விடவேண்டும் என்றும் மத்திய அரசுடன் ஒத்துழைக்க மாநில அரசுகள் மறுக்குமானால் அதன் விளைவுகளை சந்திக்க வேண்டி இருக்கும் என்றும் மத்திய உள்துறை துணை அமைச்சர் யோகேந்திர மக்வானா பகிரங்கமாக மிரட்டி இருப்பது கண்டு அதிர்ச்சி அடைந்தேன்.

### உறவு சீர்குலையும்

மக்வானாவின் பேச்சு மத்திய-மாநில அரசுகளின் உறவுகளை சீர்குலைக்கும் பேச்சாகும்.

தன்னுடைய கூற்றுக்கு ஆதரவாக கர்நாடக மாநிலத்தில் தேவராஜ் அர்ஸ் முதலமைச்சராக இருந்தபோது குரோவர் கமிஷனை மத்திய அரசு நியமித்ததை அவர் சுட்டிக் காட்டியுள்ளார்.

மாநில அரசு கமிஷனுக்கு மேலாக மத்திய அரசு கமிஷன் நியமிக்க அதிகாரம் உண்டு என உச்ச நீதிமன்றம் வழங்கியுள்ள தீர்ப்பினையும் அவர் சுட்டிக் காட்டி இருக்கிறார்.

ஆனால் அப்போது இந்திரா காங்கிரஸ் என்ன செய்தது என்பதை மக்வானாவுக்கு நினைவுபடுத்த விரும்புகிறேன்.

மத்திய அரசு கமிஷனை ஏற்கமாட்டோம் என்று கூறி குரோவர் கமிஷனுக்கு எதிராக இந்திரா காங்கிரஸ் பெரும் ஆர்ப்பாட்டம் நடத்தியது.

கர்நாடக மாநில இந்திரா காங்கிரசும், அகில இந்திய இந்திரா காங்கிரசும் மத்திய கமிஷன் நியமித்ததைக் கண்டித்து

(3-ம் பக்கம் பார்க்க)

சென்னை போஜராஜபுரம் தீ விபத்து:

# பாதிக்கப்பட்டோருக்கு தலா ரூ. 200 உதவி: எஸ்.டி.எஸ்.வழங்கினர்

**சென்னை, ஜூன் 24—சென்னை போஜபுரத்தில் ஏற்பட்ட தீ விபத்தில் பாதிக்கப்பட்ட 800க்கும் மேற்பட்ட குடும்பங்களுக்கு தலா ரூ. 200, 5 கிலோ அரிசி, வேட்டி சேலை ஆகியவற்றை வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். வழங்கினர்.**

அண்மையில் சென்னை தண்டையார் பேட்டை பகுதி போஜராஜபுரத்தில் தீவிபத்து ஒன்று ஏற்பட்டு பொதுமக்கள் பெரிதும் பாதிக்கப்பட்டனர்.

பாதிக்கப்பட்ட 800-க்கும் மேற்பட்ட குடும்பத்தினருக்கு வருவாய்த் துறை அமைச்சர் எஸ். டி. எஸ். தலா ரூ. 200, ஐந்து கிலோ அரிசி, 1 வேட்டி, 1 புடவை ஆகியவற்றை வழங்கினர்.

இந்த நிகழ்ச்சிக்கு சென்னை மாவட்டஆட்சித் தலைவர் லட்சுமிப்ராணேஷ் தலைமை வகித்தார்.

அமைச்சர் எஸ். டி. எஸ் பேசுகையில்கூறியதாவது:

பொதுமக்கள் மிகவும் விழிப்புடன் இருந்து தீவிபத்து ஏற்படாமல் இருக்க உதவி செய்ய வேண்டும். ஏதோ ஒரு இடத்தில் சிறு தவறினால் ஏற்படுகின்ற தீ எத்தனையோ ஆயிரக்கணக்கான மக்களின் வாழ்க்கையை பாதித்து விடுகிறது. தீக் காயங்களால் பலர் கஷ்டப்படுகிறார்கள் உடல் நலம் பாதிக்கப்பட்டு மக்கள் அல்லல்படுகிறார்கள். எனவே தீ விபத்து ஏற்படாமல் தடுப்பது ஒவ்வொரு குடிமகனுடைய தலையாயக் கடமையாகும்.

இவ்வாறு அமைச்சர் எஸ்.டி.எஸ் கூறினர்.

## பிரெஞ்சு அரசில் கம்யூனிஸ்ட் அமைச்சர்கள்

பாரிஸ், ஜூன் 24- பிரெஞ்சு அரசில் முதல் தடவையாக 4 கம்யூனிஸ்டு அமைச்சர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர்.

பிரான்சில் சமீபத்தில் நடந்த பொதுத் தேர்தலை அடுத்து 4 கம்யூனிஸ்ட் மந்திரிகளை பிரெஞ்சு ஜனாதிபதி மிதரான் நியமித்துள்ளார்.

இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு அரசாங்கத்தில் கம்யூனிஸ்டுகளைச் சேர்க்கும் முதலாவது பெரிய நாடு பிரான்ஸ் ஆகிறது.

## மறைவு

புதுக்கோட்டை மாவட்ட அரிமழம் நகர கழக பொருளாளர் வெற்றியப்பன் கடந்த 21-ந் தேதி காலமானார். மன்றத் தோழர்கள் சந்திரன், முத்துகுமார், தமிழ்மணி ஆகியோர் இறுதி ஊர்வலத்தில் கலந்து கொண்டு அஞ்சலி செலுத்தினர்.

# அதென்னப்பா மகா பெரிய ரகசியம்?

புதுக்கோட்டையில் பேசிய கருணாநிதியிடம், அறந்தாங்கி வட்டார காங்கிரஸ் செயலாளர் ரங்கசாமி கோனார் என்பவர் ஒரு கடிதம் கொடுத்தார். ஜப்தி கெடுபிடி இருப்பதாக அந்தக் கடிதத்தில் அவர் எழுதியிருந்தார்.

அந்தக் கடிதத்தை அந்தக் கூட்டத்தில் படித்துக் காட்டிய கருணாநிதி; ''இந்தக் கடிதத்தை—இந்திரா காங்கிரஸ்காரர் தந்த கடிதத்தை — இந்திராவிடம் கொடுப்பேன்'' என்று சொல்லி தமது கோள் மூட்டும் புத்தியை வெளிப்படுத்தியிருக்கிறார்!

இந்தச் செய்தியை ஆற்காட்டாரின் தி. மு. க. பத்திரிகை—

**எம். ஜி. ஆர். ஆட்சிக் கொடுமைகள் பற்றிய ரகசிய கடிதம்**

**பிரதமரிடம் கருணாநிதி தருகிறார்**

—இப்படி வெளியிட்டிருக்கிறது!

அட, மூதேவிகளா!

பொதுக்கூட்டத்தில் தரப்பட்ட கடிதம்!

கூடியிருந்த மக்களிடையே படித்துக்காட்டப்பட்ட கடிதம்!

அது எப்படியப்பா ரகசியக் கடிதமாகும்?

ஆத்திரக்காரனுக்கு புத்தி மட்டு என்பார்கள்!

புத்தியே இல்லாதவனுக்கு ஆத்திரம் வந்தால்...?

## முதல்வர் புரட்சித் தலைவருக்கு பாராட்டு

திண்டுக்கல், ஜூன் 24. கைத்தறித் தொழிலுக்கு தேவைப்படும் யோட்டாரக, சன்ரக நூல் மற்றும் பட்டு சாய மருந்து ஆகியவைகள் குறைந்த கட்டுப்பாட்டு விலையில் நெசவாளர்களுக்கு கிடைக்க புரட்சித் தலைவர் அரசு வழிவகை செய்துள்ளது.

இதற்கு அண்ணா கைத்தறி நெசவாளர் சங்கம் சார்பாக முதல்வர் புரட்சித் தலைவருக்கு பாராட்டுக்களை தெரிவிப்பதாக அச்சங்க செயலாளர் கிருஷ்ணன் தெரிவித்துள்ளார்.

சிலம்புச்செல்வர்

## ம. பொ. சி. பிறந்தநாள் விழா: முதல்வர் பங்கேற்பு

சென்னை, ஜூன் 24— தமிழக சட்டமன்ற மேலவைத் தலைவர் ம. பொ. சி.யின் 76 வது பிறந்த தினவிழா இம்மாதம் 26-ந் தேதி வெள்ளிக்கிழமை மாலை 6 மணி அளவில் கலைவாணர் அரங்கில் நடைபெறுகிறது.

இந்த விழாவிற்கு முதல்வர் புரட்சித்தலைவர் தலைமை வகிக்கிறார். கல்வி அமைச்சர் அரங்கநாயகம் ம.பொ.சி எழுதிய ''வில்லி பாரதத்தில் தமிழுணர்ச்சி'' என்ற நூலை வெளியிடுகிறார். மற்றும் முன்னாள் முதல்வர் பக்தவத்சலம், அமைச்சர் ஆர். எம். வீ, வி.கே. குப்புசாமி, எஸ். கே. பாலசுப்பிரமணியம், டி.கே. பகவதி, கு. சா. கிருஷ்ணமூர்த்தி, ம. சீ. கிருஷ்ணமூர்த்தி, கு. மாரியப்பன், ஆகியோர் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்குகின்றனர்.

# எகிப்து நாட்டில் தஞ்சம் அடைந்த ஈரான் ஜனாதிபதி

**ஷா மகனுடன் ரகசிய ஆலோசனை**

கெய்ரோ, ஜூன் 24 ஈரான் நாட்டில் பதவி நீக்கம் செய்யப்பட்ட ஜனாதிபதி பனி சதார் எகிப்து நாட்டில் தஞ்சம் அடைந்திருப்பதாக கூறப்படுகிறது.

ஈரான் நாட்டின் ஜனாதிபதி பனிசதார், அந்நாட்டு மதத் தலைவரான கோமேனியை எதிர்த்து பகிரங்கமாகப் பேசியதும் தன்னைக் கொல்ல சதி நடப்பதாக பேசியதும் தெரிந்ததே.

இதையடுத்து, கடந்த 11-ந்தேதியில் இருந்து ஈரான் நாட்டில் அவர் காணப்படவில்லை.

இதன் பின்னர் அவரை ஜனாதிபதி பதவியில் இருந்து கோமேனி டிஸ்மிஸ் செய்தார்.

பனிசதாரைக்கண்டவுடன் கைதுசெய்து ஒப்படைக்க வேண்டும் எனவும் ஈரான் அரசு உத்தரவிட்டுள்ளது.

இதற்கிடையில், பனி சதார் எகிப்து நாட்டிற்கு தப்பி ஓடி அங்கு தஞ்சம் அடைந்திருப்பதாகக்கூறப்படுகிறது.

பனிசதார் தற்போது எகிப்து நாட்டின் தலைநகரானகெய்ரோவில் இருப்பதாகவும், ஏற்கனவே அங்குள்ள காலஞ் சென்ற ஈரான் மன்னர் ஷாவின் மகனுடன்

(3-ம் பத்தி பார்க்க)



# பஸ் கட்டண உயர்வு: தமிழக பேருந்து பயணிகள் வரவேற்பு

**சென்னை, ஜூன் 24— தமிழ்நாடு அரசு அறிவித்துள்ள பஸ்கட்டண உயர்வை தமிழக பேருந்து பயணிகள் கழகம் வரவேற்றிருக்கிறது. மற்ற மாநில கட்டண விகிதங்களை விட தமிழகத்தில் பஸ்கட்டண விகிதம் மிகவும் குறைவாக இருக்கிறது என்றும் அது தெரிவித்திருக்கிறது.**

தமிழக பேருந்து பயணிகள் கழகத்தின் பொதுச் செயலாளர் எஸ். நம்பிராஜன் மாநில செயற்குழு உறுப்பினரும் பி. ஆர். சி. உதவி மேலாளருமான ஆர். மீனாட்சிசுந்தரம் ஆகியோர் வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் இது குறித்து கூறியிருப்பதாவது:-

அண்மையில் தமிழ்நாடு அரசு பஸ் கட்டணத்தை உயர்த்தியிருக்கிறது. இந்த பஸ் கட்டண உயர்வு மாற்ற மாநிலங்களில் உள்ள கட்டண விகிதங்களைக் காட்டிலும் மிகவும் குறைவாகும்.

''மேன்மேலும் பல கிராமங்களுக்கு போக்குவரத்து வசதிகள் செய்யவும், முன்னேற்றத்திட்டங்கள்வகுத்து செயல்பட வேண்டும்என்ற நோக்கத்துடன்தான் பஸ் கட்டணம் உயர்த்தப்பட்டுள்ளதுஎன்பதை நாங்கள் உணர்கிறோம்.

பேருந்துகளில் எரிபொருள் உதிரி உறுப்புகளின் விலையேற்றம், போக்குவரத்து கழகங்களில் தொடர்ந்து ஏற்படும் நட்டம் ஆகியவற்றை சமாளித்து ஈடுகட்டவே சரியான நேரத்தில் தக்கநடவடிக்கைகளை அரசு எடுத்திருக்கிறது.

பேருந்துகளில் பயணம் செய்யும் பயணிகள் பாதிக்காத வகையில் கட்டண உயர்வை மாற்றிஅமைத்த முதல்வர்புரட்சித்தலைவருக்கும்,போக்குவரத்துத்துறை அமைச்சர் முத்துசாமிக்கும் பேருந்து பயணிகள் கழகம் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். அரசுக்கு சிறந்த வகையில் ஒத்துழைப்புதர தயாராக இருக்கிறோம் என்பதையும், தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இவ்வாறு இந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

## 27-ம்தேதி எஸ்.எஸ்.எல்.சி தேர்வு முடிவுகள்

சென்னை, ஜூன் 24. பத்தாம் வகுப்புத் தேர்வு முடிவுகள் 27ம்தேதி சனிக்கிழமையன்று வெளியாகும்.

பத்தாம்வகுப்புதேர்வை ஏறத்தாழ 3 லட்சம் மாணவ,மாணவியர் எழுதி இருக்கிறார்கள்.

முடிவு வெளியான ஒரு வாரத்திற்குள் தேர்வு பெற்றவர்களுக்கு சான்றிதழ் புத்தகங்கள் கிடைக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

(7-ம் பத்தி தொடர்ச்சி)

ஆலோசனை நடத்தியதாகவும் கூறப்படுகிறது.

## சுட்டுக் கொண்டே இரு...

ஈரான் நாட்டில் பனிசதாரின் ஆதரவாளர்கள் எனக் கருதப்படுவோர் பிடிக்கப்பட்டஉடனடியாக சுட்டுக் கொல்லப்பட்டு வருகிறார்கள்.

இத்தாலியில் இருந்த ஈரான் நாட்டுத் தூதர் அப்பதவியில் இருந்து டிஸ்மிஸ் செய்யப்பட்டுள்ளார். ஆனால்அவர் ஈரான் நாட்டிற்கு திரும்பி வரவில்லை.

கடந்த2நாட்களில்மட்டும் பனிசதாரின் ஆதரவாளர்கள் எனக் கருதப்படும் 29 பேர் சுட்டுக் கொல்லப்பட்டனர்.

## திரும்பி வந்துவிடு..

இதற்கிடையில், ஈரான் நாட்டு வானொலியில் உரையாற்றிய மதத்தலைவர் அயதுல்லா கோமேனி பனிசதாருக்கு வேண்டுகோள் ஒன்றை விடுத்தார் உடனடியாக திரும்பி வந்து விட்டால் கடவுளால் நீ மன்னிக்கப் படுவாய் என கோமேனி கூறினார்.

கோமேனியின் ஆதரவாளர்கள், பனிசதாருக்கு எதிராக பெரும் பேரணிகளை டெஹ்ரான் நகர தெருக்களில் நடத்தி வருகிறார்கள்.

நிரந்தர வாக்குச்சாவடிகள்;

# வாக்குப்பதிவுக்கு மின்னணுக்கருவிகள்: ஷக்தர் தகவல்

**ஸ்ரீநகர், ஜூன் 24— வாக்குப்பதிவில் மின்னணு வாக்களிப்பு முறையைப் புகுத்துவதில் தேர்தல் கமிஷன் ஈடுபட்டுள்ளதாக தலைமை தேர்தல் அதிகாரி ஷக்தர் கூறினர்.**

எதிர்காலத் தில் நிரந்தர வாக்குச்சாவடிகள் அமைக்கப்படும் என்றும் அவர் கூறினர்.

நிருபர்களிடம்தலைமைத் தேர்தல் அதிகாரி ஷக்தர் கூறியதாவது:

எதிர்காலத்தில் தேர்தல்கள் சுமுகமாக நடக்க நிரந்தர வாக்குச் சாவடிகள் அமைக்கும் பணி நடைபெற்று வருகிறது.

வாக்காளர்களுக்கு அடையாளக் கார்டு தரும் செலவை மத்திய அரசும் மாநில அரசும் சமமாகப் பகிர்ந்து கொள்ள வேண்டும்.

வாக்குப்பதிவில் மின்னணு வாக்களிப்பு முறையைப் புகுத்துவதில் தேர்தல் கமிஷன் தீவிரமாக ஈடுபட்டு இருக்கிறது.

உள்நாட்டிலேயே மின்னணு வாக்குப்பதிவு இயந்திரங்கள் தயாரிப்பதில் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. மாதிரி இயந்திரங்கள் சோதனை செய்யப்பட்டு வருகின்றன.

இந்தியா முழுவதற்கும் 4 லட்சம் இயந்திரங்கள் தேவைப்படும்.

இந்த முறை அமல்படுத்தப்பட்ட பின் தேர்தல் செலவு கணிசமாகக் குறையும்.

இந்த இயந்திரங்களை உள்ளாட்சித் தேர்தலிலும் பயன்படுத்தலாம்.

இந்த இயந்திரங்களுக்கு ஆகும்செலவு 10,15ஆண்டுகளில் வசூலாகிவிடும்.

இவ்வாறு ஷக்தர் கூறினர்.

# அரே கிருஷ்ணா இயக்கத்திற்கு அமெரிக்காவில் நிதிவசூல் செய்யத்தடை

வாஷிங்டன், ஜூன் 24. அமெரிக்காவின் சிலபகுதிகளில் அரே கிருஷ்ணா இயக்கம் நிதிவசூல் செய்ய அமெரிக்க சுப்ரீம்கோர்ட் தடை விதித்து தீர்ப்பு அளித்துள்ளது.

நன்கொடை வசூல்செய்யவும் சமய பிரசுரங்களை விநியோகிக்கவும் தடைவிதிக்கப்பட்டுள்ளது.

அரே கிருஷ்ணா இயக்கம் (கிருஷ்ணபகவான்உணர்வு சங்கம்) போன்ற சமயக் குழுக்கள் பிரசுரங்கள் விநியோகம் செய்வதையும் நன்கொடை வசூலிப்பதையும் கட்டுப்படுத்தலாம் என்று அமெரிக்க சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு அளித்துள்ளது.

மாநிலபொருட்காட்சித் திடலில் அரே கிருஷ்ணா இயக்கத்தினர் திரிவதைத் தடுக்க ஒரு மாநிலத்தில் சட்டம் இருக்கிறது. அதை இந்த தீர்ப்பு உறுதி செய்வதாக இருக்கிறது.

விமான நிலையங்கள், பஸ் நிலையங்கள், போன்ற பொது இடங்களில் அரே கிருஷ்ணா இயக்கத்தினரின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்த மாநிலங்களை அந்த தீர்ப்பு அனுமதிக்கிறது.





Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029

Editor:
E. PARASURAMAN

# 26 எம். எல். ஏ.க்களுடன் அர்ஸ் சஸ்பெண்ட்

## பெண்கடத்தல்புகாரில் மந்திரியை டிஸ்மிஸ் செய்யக்கோரி சட்டசபையில் மறியல் எதிரொலி



பெங்களூர், ஜூன் 24- ஒரு பெண்ணை கடத்திச் சென்று துன்புறுத்தியதாக கர்நாடக மந்திரி மீது வழக்குத் தொடரப்பட்டிருக்கிறது அல்லவா? அந்த மந்திரியை டிஸ்மிஸ் செய்ய வேண்டும் என்று சட்டசபையில் மறியல் செய்ததாக தேவராஜ் அர்ஸ் உள்பட 27 எம். எல். ஏக்கள் சஸ்பெண்ட் செய்யப்பட்டனர்.

கர்நாடக மாநிலத்தில் திட்ட மந்திரியாக இருப்பவர் இப்ராஹிம். ஒரு பெண்ணை கடத்திச்சென்று ஒரு அறையில் அவரை பூட்டிவைத்து கொடுமைப் படுத்தியதாகவும்மிரட்டியதாகவும் அமைச்சர் இப்ராஹிம் மீது கிரிமினல் வழக்கு தொடரப் பட்டுள்ளது.

இந்த வழக்கைத் தொடர்ந்து இப்ராஹிமை மந்திரிபதவியில் இருந்து டிஸ்மிஸ் செய்யவேண்டும் என்றுகோரிசட்டசபையில் அர்ஸ் காங்கிரஸ் உள்பட எதிர்க்கட்சிகள் மறியல் போராட்டம் தொடங்கி உள்ளனர்.

மந்திரி இப்ராஹிம் மீது வழக்கு மட்டுமே பதிவாகியிருக்கிறதே தவிரகோர்ட்டில் குற்றப்பத்திரிகை தாக்கலாகவில்லை என்றும் எனவே அவர் தனது மந்திரி பதவியை ராஜிநாமா செய்ய வேண்டிய பிரச்னை இப்போது எழவில்லைஎன்றும் முதல் அமைச்சர் குண்டுராவ் எதிர்க்கட்சிகளின் குற்றச்சாட்டுகளுக்குப் பதில் அளித்து இருந்தார்.

ஆனல் இதை எதிர்க்கட்சிகள் ஏற்கவில்லை. நேற்று மாலே சட்டசபை கூடியபோது மீண்டும் எதிர்க்கட்சி எம்.எல்.ஏ.க்கள், முன்னள் முதல் அமைச்சர் தேவராஜ் அர்ஸ் தலைமையில் மறியல் செய்தனர்.

இதைத்தொடர்ந்து தேவராஜ்அர்ஸ் உள்பட 27எதிர்க்கட்சிஎம்.எல்.ஏக்களை சட்ட சபையின் இந்தக் கூட்டத் தொடர் முடியும் வரை சஸ்பெண்ட் செய்து கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ள எம். எல். ஏ. க்கள் அர்ஸ் காங்கிரஸ், ஜனதா மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிகளைச் சேர்ந்தவர்கள் ஆவர்.

## பேராசிரியர் இளங்கோவன் மறைவு

சென்னை, ஜூன் 24– புதுக்கல்லூரி தமிழ்ப் பேராசிரியர் மா. ரா. இளங்கோவன் நேற்று இரவு மாரடைப்பால்காலமானார். அவருக்குவயது49, சென்னை வானொலியில் பணியாற்றும் புனிதவதியின் கணவர் அவர்.

மறைந்த தமிழறிஞர் ராசமாணிக்கனாரின் மூத்த மகனான இளங்கோவன் ஆரம்பத்தில்ஆசிரியராகப் பணியாற்றி இடையில்பத்திரிகைத் துறையிலும் பணியாற்றினார்.

சிறுகதை, நாவல் உள்பட பல ஆராய்ச்சி நூல்களையும் இவர் எழுதியிருக்கிறார்.

## கூட்டுறவு கடன் வசூல் தீவிரம்

கோவை, ஜூன் 24— கோவை மாவட்டத்தில் வசதி படைத்த பெரிய விவசாயிகளிடம் இருந்து கூட்டுறவு கடன் வசூல் தீவிரப்படுத்தப்பட்டுள்ளது என்று மாவட்ட ஆட்சித் தலைவர் மலைச்சாமி கூறினார்.

## சென்னை பாங்க் ஒன்றில் கொள்ளைமுயற்சி: ஒருவர் கைது

சென்னை, ஜூன் 24— சென்னை புரசைவாக்கம் ஐரோடில் உள்ள இந்தியன் பாங்க் கிளையில் இன்று அதிகாலை 4 மணிக்கு இருவாலிபர்கள் கொள்ளையடிக்க முயற்சித்தனர்.

இரும்புக் கதவை அவர்கள் திறக்க முயற்சித்துக் கொண்டிருந்தபோது அவ்வழியாகச் சென்றரோந்துப்போலீசார் அவர்களைப்பார்த்துவிடவே அந்த ஆசாமிகள் தப்பி ஓட முயற்சித்தனர்,

போலீசார் அவர்களை விரட்டி ஆர்தர் என்பவரைக் கைது செய்தனர். வின்சென்ட் என்ற ஆசாமி தப்பி ஓடி விட்டார்.

தொடர்ந்து போலீசார் விசாரணை நடத்தி வருகிறார்கள்.



## நெடுமாறன் கேள்வி...

(1ம் பக்க தொடர்ச்சி)

தீர்மானங்கள் நிறைவேற்றின,

### வரலாறும் தெரியாது; தியாகமும் கிடையாது

காங்கிரஸ் வரலாறு தெரியாமல் காங்கிரசுக்காக எந்தத் தியாகமும் செய்யாமல் சஞ்சய்காந்தி தயவால் மட்டுமே அமைச்சர் பதவியைப் பெற்ற மக்வானு போன்றவர்கள் முன்னுக்குப் பின் முரணாக உளறாமல் இருப்பது நல்லது.

மேலும் மத்திய கமிஷன் அமைக்கப்பட்ட பிறகு தமிழக அரசும் கேரள அரசும் தங்கள் கமிஷன்களை அமைக்கவில்லை.

### அடாவடி செய்தது யார்?

இரு மாநில அரசுகளும் தங்கள் கமிஷன்களை அமைத்த பிறகு தான் மத்திய அரசு தனதுகமிஷனை அமைத்தது. எனவே மத்திய அரசின் நடவடிக்கைதான் அடாவடித் தனமான நடவடிக்கையாகும்.

கருணாநிதி மீது போடப்பட்ட வழக்குகளை மத்திய அரசு வாபஸ் வாங்கியதை யாரும் கேள்வி கேட்கக் கூடாது என்றும் மக்வானா கூறி இருப்பதுடன், கருணாநிதி முதலமைச்சராக இருந்தபோது நடந்த எரிசாராய ஊழலையும் விசாரிக்கப் போவதில்லை என்றும் சொல்லி இருக்கிறார்.

### கருணாநிதியின் ஊழலை மறைக்கும் மர்மம் என்ன?

கருணாநிதியின் ஊழலை மூடி மறைக்கும் மத்திய அரசுக்கு மற்றவர்கள் மீது ஊழல் குற்றச் சாட்டுக்களை கூற தகுதி இல்லை என்பதை சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

இவ்வாறு நெடுமாறன் அறிக்கையில் கூறி இருக்கிறார்.

## சென்னையில் ஆடம்பர விபச்சாரவிடுதி: 9 பெண்கள் கைது

சென்னை, ஜூன் 24- சென்னை அண்ணா நகர் கற்பகம் காலனி பகுதியில் ஓர் வீட்டில் விபச்சாரம் நடப்பதாக போலீசாருக்கு தகவல் வந்தது.

இதையடுத்துபோலீசார் அங்கு சென்று சோதனை நடத்தியதில் அங்கு குளுகுளு வசதி கொண்ட ஆடம்பரமான விபச்சார விடுதி இருப்பது தெரிய வந்தது.

அங்கு 9 இளம் பெண்களும், அவர்களை விபசாரத்தில் ஈடுபடுத்தியதாக பழனி என்ற நபரும் கைது செய்யப்பட்டனர்.

## அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் அறிவிப்பு: தமிழகத்தில் மின்வெட்டு அடியோடு ரத்து

சென்னை, ஜூன் 24. தமிழகத்தில் தொழிற்சாலைகளுக்கு இருந்து வந்த 30 சதவிகித மின்வெட்டு நாளை முதல் (25ந்தேதி) அடியோடு ரத்து செய்யப்படுகிறது.

இத்தகவலை மின்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் அறிவித்தார்.

நாளை முதல் தமிழகத்தில் உயரழுத்த, குறைந்த அழுத்தமினசாரம்போன்ற எல்லா வகை வகை மின்சாரத்திற்கும் எந்த வகை மின்வெட்டும் இருக்காது.

அண்ணா



பெரியார் போக்குவரத்துகழக

## பணிமனை அடிக்கல் நாட்டு விழா: அமைச்சர்கள் பங்கேற்பு

கள்ளக்குறிச்சி, ஜூன் 24-கள்ளக்குறிச்சியில் தந்தை பெரியார் போக்குவரத்துக் கழக பணிமனை அடிக்கல் நாட்டுவிழாவும், புதிய பேருந்துகள் தொடக்க விழாவும் தென்னாற்காடு மாவட்டக் கலெக்டர் சந்திரலேகா தலைமையில் நடந்தது.

போக்குவரத்துத் துறை அமைச்சர் எஸ்.முத்துசாமி பணிமனைக்கான அடிக்கல்லை நாட்டி சிறப்புரையாற்றினார்.

மின்துறை அமைச்சர் பண்ருட்டி எஸ். ராமச்சந்திரன் புதிய வழித்தடங்களில் பஸ் போக்குவரத்தை தொடங்கி வைத்தார்.

பெரியார் போக்குவரத்துக் கழக நிர்வாக இயக்குநர் ஆர். ரத்தின சபாபதி வரவேற்புரையாற்றினார்.

ஜெனரல் மானேஜர் பாலசண்முகம் நன்றி கூறினார்.



மதுரை தீ விபத்தில் பாதிக்கப்பட்டவர்களுக்கு

# தலா ரூ. 200; 5 கிலோ அரிசி - வேட்டி சேலை: அரசு நிவாரண உதவி

மதுரை, ஜூன் 24—மதுரை தீவிபத்தில் பாதிக்கப்பட்ட 63 பேருக்கு நிவாரண உதவியாக தலா ரூபாய் 200, வேட்டி சேலை 5 கிலோ அரிசி வழங்கப்பட்டது.

மாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலகத்தைச் சேர்ந்த அதிகாரிகள் இந்த நிவாரண உதவிகளை வழங்கினர்.

மதுரை தமிழ்ச் சங்க சாலையில் மாநகராட்சிப் பெண்கள் பள்ளி விளையாட்டு மைதானம் அருகேயுள்ள குடிசைப் பகுதியில் தீ விபத்து ஏற்பட்டது.

இதில் 63 குடிசைகள் முற்றிலும் எரிந்து சாம்பலாயின. சுமார் 65 ஆயிரம் மதிப்புள்ள பொருட்கள் நாசமாயின.

தீ விபத்தில் பாதிக்கப்பட்டவர்களுக்கு வேண்டிய நிவாரணப்பணிகளை மாநகராட்சி உடனடியாக செய்தது. அவர்கள் தங்குவதற்கும் உணவிற்கும் ஏற்பாடு செய்யப்பட்டது.

### நிவாரணப்பணி

இந்த தீ விபத்தில் பாதிக்கப்பட்ட ஒவ்வொரு குடும்பத்துக்கும் தலா ரூ. 200, 5 கிலோ அரிசி வேட்டி சேலை ஆகியன வழங்கப்பட்டது.

மதுரைமாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலகத்தைச் சேர்ந்த உயர் அதிகாரிகள் இந்த நிவாரண உதவிகளை வழங்கினர்.

## குற்றாலத்தில் சாரல் விழா

குற்றாலம், ஜூன் 24-குற்றாலத்தில் ஜூலை 1ந் தேதி முதல் 30ந்தேதி வரை சாரல் திருவிழா குற்றாலநாதர் கோவிலின் சார்பில் நடத்தப்படுகிறது.

இவ்விழாவில், சமய, இலக்கிய சொற்பொழிவுகள் மெல்லிசைக் கச்சேரிகள் போன்றவை நடைபெறும்.

விழாவிற்கான ஏற்பாடுகளை, கோவில் நிர்வாகி முனுசாமி, அறங்காவலர் குழுத்தலைவர் ராமையா கரையாளர், அறங்காவலர்கள், சரவணன், நீதிநாதன், உலகநாதன் ஆகியோர்செய்துவருகிறார்கள்.

அரசு ஊழியர்களுக்கு

## விடுப்பு பயண கட்டண சலுகை

சென்னை, ஜூன் 24-அரசு ஊழியர்களுக்கு விடுப்பு பயணக் கட்டணச் சலுகை வழங்க அரசு உத்திரவு பிறப்பித்துள்ளது.

இதனால் 5 லட்சம் அரசு ஊழியர்கள் பயனடைவார்கள். அரசு ஊழியரும் அவர் குடும்பத்தினரும் தமிழ்நாட்டிலிருந்து 240 கிலோமீட்டருக்கு மேல் பயணம் செய்தால் ஒரு வழி கட்டணத் தொகை பெறுவார்கள். இரண்டு வருடத்திற்கு ஒருமுறை ரயில் அல்லது பஸ் ஒரு வழி கட்டணச் சலுகை அளிக்கப்படும்.

பதவி உயர்வு பெறும்

## அரசு ஊழியருக்கு கூடுதல் சம்பளம்

சென்னை, ஜூன் 24—பதவி உயர்வு பெறும் அரசு ஊழியர்களுக்கு இனிமேல் 5 சதவிகிதம் சம்பளம் கூடுதலாக கிடைக்கும் என்று தமிழக அரசு உத்தரவு பிறப்பித்துள்ளது.

அரசு பதவியிலுள்ள ஒருவர் மேல் பதவிக்கு உயர்த்தப்பட்ட போது, அவர் கீழ் பதவியில் பெற்ற சம்பளத்தைவிட 3 அல்லது 5 சதவீதம் கூடுதலான சம்பளம் கிடைக்க வேண்டும் என்று ஒரு நபர் கமிஷன் தெரிவித்திருந்தது.

அந்த கமிஷன் அடிப்படையில் இந்த உத்தரவு பிறப்பிக்கப்பட்டதாக அரசு குறிப்பு தெரிவித்துள்ளது.

புதுக்கோட்டையில்

# தீப்பெட்டித் தொழிற்சாலை கிடங்கில் தீ

## ரூ. 9 லட்சம் பொருட்கள் சேதம்

புதுக்கோட்டை, ஜூன்24—புதுக்கோட்டையில் உள்ள தீப்பெட்டி தயாரிக்கும் உரிமையாளர்களின் கூட்டுறவு சங்க கிடங்கில் ஏற்பட்ட தீவிபத்தில் 9 லட்ச ரூபாய் மதிப்புள்ள பொருட்கள் சேதமடைந்தன.

புதுக்கோட்டையில் தீப்பெட்டி தொழிற்சாலை உரிமையாளர்களின் கூட்டுறவுச்சங்க கட்டிடத்தின் கிடங்கில்பயங்கரதீ விபத்து ஏற்பட்டது.

இக்கட்டிடத்தில் 8 ஆயிரத்து 500 தீப்பெட்டி பண்டல்கள் இருந்தன. அதோடு தீப்பெட்டித் தயாரிப்புக்கு தேவையான மூலப்பொருள்களான பாஸ்பரஸ், கந்தகம், பொட்டாசியம் குளோரைட் போன்ற பொருள்களும் இருந்தன.

### ரூ. 9 லட்சம் சேதம்

தீ விபத்தில்தீப்பெட்டிப் பண்டல்களும் மற்ற பொருட்களும் சேதமடைந்தன.

சேதமடைந்த பொருட்களின் மதிப்பு 9 லட்ச ரூபாய் இருக்கும் எனக் கூறப்படுகிறது.

### பணம் தப்பியது

கிடங்குடன் இணைந்த அலுவலகக் கட்டிடம் மற்றும் அலுவலர்கள் இருப்பிடம் முழுவதும் தீயில் கருகியது. அலமாரியில் வைக்கப்பட்டிருந்த 9 ஆயிரத்து 500 ரூபாய் பணமும் மற்றும் கணக்குப் புத்தகங்களும் தீயில் இருந்து தப்பின.

இத் தீவிபத்திற்கான காரணம் தெரியவில்லை. போலீசார் இது குறித்து விசாரித்து வருகிறார்கள்.

முன்னாள் மத்திய மந்திரி

## எஸ். கே. பட்டீல் மரணம்

பம்பாய், ஜூன் 24—முன்னாள் மத்திய மந்திரியும், இ.காங்கிரஸ் தலைவருமான எஸ். கே. பட்டீல் (வயது 80) மாரடைப்பால் மரணமடைந்தார்.

கடந்த ஞாயிற்றுக் கிழமை அவருக்கு மாரடைப்பு ஏற்பட்டு பம்பாயில் உள்ள ஒரு ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார். நேற்று இரவு அவர் அங்கு மரணமடைந்தார்.

தென்காசியில் பரிதாபம்:

## தேள் கொட்டி பெண் மரணம்

தென்காசி, ஜூன் 24-தேள் வகையிலேயே கொடிய விஷமுள்ளது "ராஜா தேள்" எனக் கூறப்படுவதாகும்.

தென்காசி அணைக் கரைத் தெருவைச் சேர்ந்தவர் பாண்டிய ஆசாரி. இவரது மனைவி லட்சுமி (வயது 39).

இரவில் லட்சுமி படுத்து உறங்கும் போது, ராஜா தேள் ஒன்று அவரைக் கொட்டியது.

இதையடுத்து அவர் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு பின்னர் இறந்து விட்டார்.